



யார்? என்று தேவர்களைக் கேட்டாள். (பார்வதியின் ஸமீபத்திலே உட்கார்ந்ததற்காக) அஸுரரையெல்லாம் கொன்றவனும் கோபங்கொண்டு வஜ்ராயுதத்தால் தம்மை அடிக்க வந்தவனுமான அந்த இந்திரனுடைய வஜ்ராயுதத்தோடு கூடின கையை மகிமையுடையவரும் ஸர்வலோகேசுவரரும் ஸர்வவ்யாபியும் பிரபுவுமான ஸ்ரீ பரமேசுவரர் சிரித்துக்கொண்டு விரைவாக ஸ்தம்பிக்கச்செய்தார். பிறகு, ஸ்தம்பிக்கும்படி செய்யப்பட்ட புஜத்தையுடையவனும் இந்திரன் தேவகணங்களால் சூழப்பட்டு அவர்களோடு பிரபுவும் அழிவற்றவருமான பிரமதேவரிடம் விரைவாகச்சென்றான். இந்திராதிகளான தேவர்களெல்லாரும் அப்பொழுது பிரமதேவரைத் தலையால் வணங்கிக் கைகளைக் குவித்துக்கொண்டு பின்வருமாறு கூறினார்கள்: பிரமதேவரே! பாலவடிவந்தரித்து பார்வதியினுடைய மடியை அடைந்திருக்கின்ற அற்புதமான ஒரு புருஷனைக் கண்டோம். அந்தத் திவ்யபுருஷன் எங்களால் அறியப்படவில்லை. அந்தப் பாலனாலே இந்திரனோடுகூடின நாங்கள் யுத்தஞ்செய்யாமலே விளையாட்டாக ஜயிக்கப்பட்டோமே. அப்படிப்பட்ட புருஷனைப்பற்றி நாங்கள் உங்களைக் கேட்கவிரும்புகிறோம். என்றார்கள். பிரமவித்துக்களுள் உத்தமரும் பகவானும் மகிமையுடையவருமான பிரமதேவர் இந்திராதிகளான தேவசிரேஷ்டர்களுடைய அந்த வார்த்தையைக் கேட்டு அவர்களைப் பார்த்துக் குழந்தையை அளவற்ற தேஜஸுள்ள சம்புவாக எண்ணிக் கூறலானார்: ஷாட்குண்யபரிபூரணரான அந்தப் பரமசிவன் ஜங்கமஸ்தாவரங்களின் உலகத்துக்கு நாதர். அந்த மஹேசுவரனைக்காட்டிலும் சிரேஷ்டமான வேறு வஸ்து ஒன்றுமில்லை. உங்களால் அளவற்ற ஒளியுள்ள அந்தப் புருஷர் பார்வதியோடு சேர்க்கப்பட்டவரே. அவர் ருத்திரர். பார்வதிநிமித்தமாகப் பாலவடிவத்தை அவர் தாங்கினார். அப்படிப்பட்ட நீங்கள் என்னுடன் சேர்ந்து அவரையே சரணமடையுங்கள். மஹிமை பொருந்தியவரான அவரே தேவர், எல்லா உலகங்களுக்கும் ஈசுவரர், பிரபு என்று சொன்னார். அந்தப் பிரமதேவரோடு கூடினவர்களான எல்லாத் தேவர்களும் பாலசூரியனுக்கு ஒப்பான காந்தியுள்ள அந்தப் பாலனை அந்தப் புவனேசுவரரென்று அறியவில்லை. பிறகு, பிதாமஹரான பிரமதேவர் பரமசிவனருகில் வந்து இவரே சிரேஷ்டர் என்று அறிந்து அவரை வணங்கினார். பிரமா: நீர் யஜ்ஞம். நீர் இவ்வுலகத்திற்கு ரக்ஷகர். நீரே லயஸ்தானம். நீர் உத்பத்திக்குக் காரணம். நீர் மஹாதேவர். நீர் ஜ்யோதிஸ்; உத்தமமான பதம். ஸ்தாவரஜங்கமவடிவமான இவ்வுலகமுழுவதும் உம்மாலே வியாபிக்கப்பட்டிருக்கின்றது. பகவானே!

சென்றதற்கும் வருவதற்கும் நாதரே! லோகநாதரே! ஜகந்நாதரே! உம்முடைய குரோதத்தால் பீடிக்கப்பட்ட இந்திரனுக்கு நீர் அனுக்கிரகஞ்செய்யும்' என்று பிரார்த்தித்தார். மஹாவிஷ்ணுவினுடைய உந்திக்கமலத்தில் தோன்றியவரான பிரமதேவருடைய வார்த்தையைக்கேட்டுப் பிரீதியுடைய மகேசுவரர் அருள் புரிவதில் நோக்கமுற்றவராகிப் பிறகு அட்டஹாஸஞ்செய்தார். பிறகு, அந்தத்தேவர்கள் உமையையும் ருத்திரரையும் ஸ்தோத்திரத்தினால் மனந்தெளியச்செய்தார்கள். உடனே, இந்திரனுடைய கையானது முன்போலாகியது. ஆறுகுணங்களால் நிறைந்தவரும் விருஷபத்தைக் கொடியாகக்கொண்டவரும் தேவசிரேஷ்டரும் தக்ஷனுடைய யாகத்தை நாசஞ்செய்தவருமான ஈசுவர் பத்னியுடன் கூடியவராக அந்தத் தேவர்களுடைய விஷயத்தில் அருளுள்ளவரானார். அவரே ருத்திரர்; அவரே சிவன்; அவரே அக்னி; எல்லாம் அவரே; அவர் எல்லாவற்றையும் அறிந்தவர்; அவரே இந்திரன்; அவரே வாயு; அவர் அசுவினீதேவர்கள்; அவரே மின்னல்கள்; அவரே உலகம் உண்டாவதற்குக் காரணம். அவர் பர்ஜன்யம்; அவரே சாசுவதரான மகாதேவர்; அவர் சந்திரன்; அவர் ஈசானர்; அவர் சூரியன்; அவர் வருணன்; அவர் காலன்; அவர் அந்தகன்; அவர் மிருத்யு; அவர் யமன்; அவரே இரவுபகல்கள்; அவரே மாதங்கள், பக்ஷங்கள், ருதுக்கள், இரண்டு ஸந்தியாகாலங்கள், ஸம்வத்ஸரம்; அவரே உலகத்தைப் போஷிக்கின்றவர்; அவரே உலகத்தை உண்டுபண்ணுகிறவர்; அவரே உலகத்தை வடிவமாகக்கொண்டவர்; அவரே எல்லாக் காரியங்களையும் செய்கின்றவர். சரீரமில்லாதவரான அந்தப் பகவான் எல்லாத் தேவர்களுடைய சரீரத்தையும் தரிக்கிறார். எல்லாத் தேவர்களாலும் அந்தத்தேவர் ஒருவிதமாகவும் பலவிதமாகவும் நூறுவிதமாகவும் ஆயிரவிதமாகவும் மறுபடியும் லக்ஷவிதமாகவும் ஸ்தோத்திரம்பண்ணப்பட்டிருக்கிறார். வேதங்களை அறிந்தவர்களான பிராம்மணர்கள் அந்தத் தேவருக்கு இரண்டு சரீரங்கள் உண்டென்று அறிகிறார்கள். ஒன்று கோரஸ்வரூபம், மற்றொன்று மங்களகரமானது. அவ்விரண்டு சரீரங்களும் பின்னும் பலவாறாக இருக்கின்றன. அந்த அக்னி, விஷ்ணு, அந்தப்பாஸ்கரன் இவர்கள் ரக்ஷஸ்ஸ்வரூபியான பகவானுடைய கோரசரீரம். ஜலம், தேஜஸ், சந்திரன் இவைகளெல்லாம் அவருடைய ஸௌம்யமான சரீரம். அங்கங்களுடனும் உபநிஷத்துக்களுடனும் கூடின வேதங்களிலும் புராணங்களிலும் அத்யாத்ம சாஸ்திரங்களிலும் உத்தமமான ரகசியமாயிருப்பது தேவரான மஹேசுவரரே. இப்படிப்பட்ட மகாதேவர் அதிகப் பெருமையுள்ளவர், ஆறுகுணங்களால் நிறைந்த

வர், பிறப்பில்லாதவர். பாண்டுநந்தன! ஆயிரம் வர்ஷகாலம் இடைவிடாமல் நான் சொன்னாலும் (அந்தப்) பகவானுடைய எல்லாக் குணங்களையும் என்னால் சொல்வதற்கு இயலாது. எல்லாவிதமான (துஷ்ட) [1] கர்மங்களாலும் பீடிக்கப்பட்டு எல்லாவிதமான பாபங்களுடனும் கூடியவர்களாயிருந்தாலும் சரணாகதர்களான பக்தர்களைச் சரண்யரான அந்தப் பகவான் மிக்கப்ரீதியுடனே எல்லா இடுக்கண்களிலிருந்தும் விடுவிக்கிறார். அந்தப் பகவான் பக்தர்களுக்கு நீண்டகாலம் வாழ்நாளையும் ஆரோக்கியத்தையும் ஐசுவரியத்தையும் தனத்தையும் புஷ்களமான அபீஷ்டங்களையும் கொடுக்கிறார். அவர் மனிதர்களுக்கு (எல்லா அபீஷ்டங்களையும்) கொடுக்கிறார். அவரே மீண்டும் அபகரிக்கிறார். இந்திரன்முதலான தேவர்களிடமுள்ள ஐசுவரியம் அவருடையதாகச் சொல்லப்படுகிறது. உலகங்களில் மனிதர்களுடைய சுபாசுபங்களை அவரே அறிகிறார். அபீஷ்டங்களுக்குப் பிரபுவாதலின் ஈசுவரரென்று சொல்லப்படுகிறார். மகாபூதங்களுக்கு ஈசுவரராயிருப்பதால் மகேசுவரரென்று சொல்லப்படுகிறார். பலவாறு பலவித ரூபங்களாலே எல்லா உலகத்தையும் வியாபித்திருக்கிறார். அந்தத் தேவருடைய முகமானது ஸமுத்திரத்தில் நிலைபெற்று ஜலரூபமான ஹவிஸைப் பானம் செய்துகொண்டு வடவாமுகமென்று பிரஸித்திபெற்றிருக்கின்றது. இந்தத்தேவர் எப்பொழுதும் ஸ்மசானங்களில் நித்தியவாஸஞ்செய்கிறார். அந்த இடத்தில் ஜனங்கள் இந்த ஈசுவரரை வீரஸ்தானரென்று பூஜிக்கின்றார்கள். உலகத்தில் மனிதர்கள் எந்த ரூபங்களைப் பூஜிக்கின்றார்களோ ஸ்துதிக்கின்றார்களோ அப்படிப்பட்ட ஈசுவரருடைய பிரகாசிக்கின்ற கோரரூபங்கள் அனேகங்கள் இருக்கின்றன. மகிமையினாலும் விபுவாயிருத்தலாலும் அவ்வாறே செய்கையினாலும் ஆத்தத்தோடுகூடியவையாக எந்தப் [illegible]விசனம் பண்ணப்படுகின்றனவோ அப்படிப்பட்ட

யிறது. எல்லாவிதத்திலும் பசுக்களை ரக்ஷிப்பதாலும் அந்தப் பசுக்களுடன் ரமிப்பதாலும் அந்தப் பசுக்களுக்கு அதிபதியாக இருப்பதாலும் பசுபதியென்று சொல்லப்படுகிறார். இவருடைய சிவலிங்கமானது பிரம்மசர்யத்தினால் நிலைபெற்றிருத்தலாலும் இவர் உலகங்களைப் பெரியவடிவமுள்ளவையாகச் செய்தலாலும் மஹேஸ்வரரென்று எண்ணப்பட்டிருக்கிறார். ரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸ்த்ரீகளும் இவருடைய லிங்கத்தை ஆராதிக்கின்றார்கள். அந்த லிங்கம் மேலான இடத்தில் நிலைபெற்றிருக்கிறது. அந்த லிங்கமானது பூஜிக்கப்படும்பொழுது அந்த மகேஸ்வரர் ஸந்தோஷமடைகிறார். மேலும், சங்கரர் ஸுகியர்களுக்கும் பிரீதராகவும் அதிக மகிழ்ச்சியுள்ளவராகவும் ஆகிறார். இறந்தகாலத்திலும் வருங்காலத்திலும் நிகழ்காலத்திலும் (பிரவாஹரூபமாக) நிலைபெற்றிருக்கின்ற ஸ்தாவரஜங்கமர் தமக்கமான அவருடைய ரூபமானது பலவாறாக இருக்கின்றமையால் அந்த மகேஸ்வரர் பஹுரூபரென்று சொல்லப்படுகிறார். அந்த ஈஸ்வரர் ஒருகண்ணுடையவராகவும் நாற்புறத்திலும் கண்களையுடையவராகவும் மிகப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறார். அவர் க்ரோதத்தினாலே உலகங்களில் அனுப்பிரவேசம் செய்ததால் ஸர்வரென்றும் எண்ணப்படுகிறார். அவருடைய ரூபமானது தூம்ரவர்ணமாக இருத்தலால் தூர்ஜடியென்றும் சொல்லப்படுகிறார். விச்வேதேவர்கள் அவரிடத்தில் ஸாந்நித்யம் செய்ததால் விச்வரூபரென்றும் எண்ணப்படுகிறார். லோகநாதரான ஈஸ்வரர் ஆகாசம், ஜலம், பூமி இம்மூன்று தேவிகளையும் அடைதலால் த்ரியம்பகரென்று சொல்லப்படுகிறார். மனிதர்களுக்கு மங்களத்தை விரும்பிக்கொண்டு ஸர்வகாரியங்களிலும் ஸர்வார்த்தங்களையும் நித்யம் விருத்திசெய்வதனால் இவர் சிவனென்று எண்ணப்படுகிறார். ஆயிரங் கண்களையுடைய[illegible] பதினாயிரங் கண்

